● **36 - 40** ஆகிய வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையிற் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து **அதன் இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**அட்டவணை**

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1.** | சரியானது | பிழையானது |
| **2.** | சரியானது | சரியானது |
| **3.** | பிழையானது | பிழையானது |
| **4.** | பிழையானது | சரியானது |
| **5.** | சரியானது | சரியானதும், முதலாம் கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|
| 36. இத்தாலிய நகரங்களில் ஆரம்பமாகிய சமய சீர்திருத்த இயக்கம் மேற்கு ஐரோப்பா முழுவதும் பரவியது. | சமய சீர்திருத்தத்தோடு மத்திய ஐரோப்பாவிலே சமய விவகாரங்களில் நிலவிய ஒற்றுமை முடிவடைந்தது. | (……) |
| 37. 1898 இல் சீயம் அமெரிக்காவின் காலனித்துவ நாடாகாகியது. | சீனாவில் 1911 இல் நடைபெற்ற புரட்சி சியாங்கை ஷெக்கின் தலைமையில் நடைபெற்றது. | (……) |
| 38. சீனாவில் 1911 இல் ஏற்பட்ட புரட்சியின் விளைவாக மஞ்சு அரங்கம் அழிந்தது. | 1917 ஆம் ஆண்டு வல்ஃபர் பிரகடனம் மூலம் பலஸ்தீனத்தில் ஒரு யூதர் அரசை உருவாக்குவதற்குப் பிரித்தானிய அரசாங்கம் உத்தரவாதம் அளித்தது. | (……) |
| 39. இரண்டாம் உலகப் போரின் விளைவாக உலகத்து வலுச்சம நிலையில் மாற்றம் ஏற்பட்டது. | இரண்டாம் உலகப் போரின் விளைவாக ஐக்கிய அமெரிக்கா, சோவியத் ஒன்றியம் ஆகியன உலகில் மிகப் பலமான வல்லரசுகளாகிவிட்டன. பிரித்தானியா, பிரான்ஸ், ஜேர்மனி ஆகியன இரண்டாம் நிலைக்குத் தள்ளப்பட்டன. | (……) |
| 40. இருபதாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில், வெள்ளையர்களையும் கறுப்பினத்தவரையும் சமுதாயத்தில் எல்லா மட்டங்களிலும் வேறுபடுத்துவதற்குத் தென்னாபிரிக்க அரசாங்கம் கடைப்பிடித்த கொள்கை அப்பார்தீட் என்றும் சொல்லப்பட்டது. | ஜவர்ஹர்லால் நேருவிற்குப் பின்பு 1964 இல் அவரது மகள் இந்திரா காந்தி இந்தியாவின் இரண்டாவது பிரதமராகப் பதவியேற்றார். | (……) |

* *

[பக். 7 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2012 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2012 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2012

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II (II කොටස)
வரலாறு II (பகுதி II)
History II (Part II)

25-C T II

## நவீன உலக வரலாறு – கி.பி 1500 – 1989

அறிவுறுத்தல்கள்:
※ **முதலாம்** வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(முதலாம் வினாவுக்கு விடையளிப்பதற்கு **உலகப் புறவுருவப் படம்** வழங்கப்படும்).

## பகுதி II

1. தரப்பட்டுள்ள உலகப் புறவுருவப் படத்தில் மேல்வரும் **எல்லா இடங்களையும் குறித்துப்** பெயரிட்டு, அவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றிச் சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.
   - (i) நைல் நதி
   - (ii) கியூபா
   - (iii) ஹட்சன் வளைகுடா
   - (iv) போர்னியா
   - (v) கல்கத்தா
   - (vi) நோர்வே
   - (vii) கோல்ட் கோய்ற்
   - (viii) பனாமாக் கால்வாய்

   *(சரியாகக் குறித்துப் பெயரிடுவதற்கு 01 புள்ளி ; சிறுகுறிப்பு ஒவ்வொன்றுக்கும் 05 புள்ளிகள்)*

2. மறுமலர்ச்சியோடு நவீன காலம் ஆரம்பமாகியது.
   - (i) மறுமலர்ச்சி ஆரம்பமாகிய நாட்டின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*
   - (ii) மறுமலர்ச்சி ஏற்படுவதற்கு ஏதுவான **இரண்டு** காரணங்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   - (iii) ஐரோப்பியப் பண்பாடு தொடர்பாக 'மறுமலர்ச்சி' என்னும் சொல்லினைச் சுருக்கமாக விளக்குக. *(03 புள்ளிகள்)*
   - (iv) மறுமலர்ச்சியின் பிரதான அம்சங்களைப் பரிசீலித்து, முன்னே சொல்லப்பட்டுள்ள கூற்றினை ஆராய்க. *(08 புள்ளிகள்)*

3. "கைத்தொழிற் புரட்சி 19 ஆம் நூற்றாண்டிலே ஐரோப்பாவில் சமூக, பொருளாதார மாற்றத்திற்கு ஏதுவான பிரதான காரணமாகும்".
   - (i) கைத்தொழிற் புரட்சி ஆரம்பித்த நாட்டின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*
   - (ii) கைத்தொழிற் புரட்சியின் ஆரம்பக் கட்டத்தில் பருத்தி ஆடைத் தொழில் தொடர்பாக ஏற்பட்ட இரு புதிய கண்டுபிடிப்புகளைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   - (iii) கைத்தொழிற் புரட்சி ஏற்பட்டமைக்கு ஏதுவாகவிருந்த **மூன்று** காரணங்களைக் குறிப்பிடுக. *(03 புள்ளிகள்)*
   - (iv) கைத்தொழிற் புரட்சியின் குறுகியகால, நீண்டகால விளைவுகள் தொடர்பாக மேலே குறிப்பிடப்பட்ட கூற்றினை நுணுக்கமாகப் பரிசீலனை செய்க. *(08 புள்ளிகள்)*

4. (i) 1857 இற் பிரித்தானியருக்கு எதிராக ஏற்பட்ட கிளர்ச்சிக்கு ஏதுவான பிரதானமான காரணங்களை ஆராய்க. *(08 புள்ளிகள்)*
   (ii) குறிப்பாக அதன் விளைவுகளைக் கவனத்திற் கொண்டு பிரித்தானியர் கால இந்திய வரலாற்றில் அக்கிளர்ச்சியின் முக்கியத்துவத்தைப் பரிசீலனை செய்க. *(06 புள்ளிகள்)*

5. பத்தொன்பதாம் நூற்றாண்டிலே ஜப்பானில் பொருளாதாரஅமைப்பு, சமூகஅமைப்பு, அரசியல் அமைப்பு என்பன சீரழிந்தமைக்கான காரணங்களைச் சுருக்கமாக ஆராய்க. *(14 புள்ளிகள்)*

[பக். 8 ஐப் பார்க்க

6. “மேனாட்டு வரலாற்றில் முதலாம் உலகப் போர் ஒரு திருப்புமுனையாகும்”.
   (i) முதலாம் உலகப் போருக்கு ஏதுவான உடனடிக் காரணம் யாது ? *(01 புள்ளி)*
   (ii) உலகப் போரிற் பங்கு கொண்ட எதிரணிகளைச் சேர்ந்த இரு பகை நாடுகளின் பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   (iii) முதலாம் உலகப் போரின் முடிவிலே ஏற்பட்ட வேர்ஸைல் உடன்படிக்கையின் பிரதானமான அம்சங்களைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. *(03 புள்ளிகள்)*
   (iv) முதலாம் உலகப் போரின் விளைவுகளைக் குறித்து மேலே தலைப்பிலுள்ள கூற்றினை நுணுக்கமாக ஆராய்க. *(08 புள்ளிகள்)*

7. ஒன்றில் **(A)** பகுதிக்கு **அல்லது (B)** பகுதிக்கு விடை எழுதுக.
   (A) (i) 1917 ஆம் ஆண்டில் ரஷ்யப் புரட்சி ஏற்படுவதற்கு ஏதுவான பின்னணியைப் பரிசீலனை செய்க. *(08 புள்ளிகள்)*
   (ii) வொல்ஷெபிக் கட்சியினர் வெற்றி பெற்றமைக்கு ஏதுவான காரணங்களை விளக்குக. *(06 புள்ளிகள்)*

   (B) (i) சீனாவிலே பொதுவுடமைப் புரட்சி ஏதுவான பிரதானமான காரணங்கள் யாவை ? *(08 புள்ளிகள்)*
   (ii) அது வெற்றிபெறுவதில் மா சே - துங் கொண்டிருந்த பங்கினை மதிப்பிடுக. *(06 புள்ளிகள்)*

8. ஐக்கிய அமெரிக்கா, சோவியற் ஒன்றியம் ஆகியவற்றின் தலைமையிலுள்ள வல்லரசுகளுக்கிடையில் 1960 வரை இடம்பெற்ற ஆதிக்கப் போட்டியினைச் சுருக்கமாகப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

9. மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டின்** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சுருக்கமான குறிப்புகள் எழுதுக.
   (i) ஃபிராங்ளின் டி ரூஸ்வெல்ட்
   (ii) முகம்மது அலி ஜின்னா
   (iii) சுகர்ணோ
   (iv) அப்துல் நஸீர்
   (v) ஃபிடெல் கஸ்ற்றோ
   *(ஒன்றுக்கு 07 புள்ளிகள்)*

* * *

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2012 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2012 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2012

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ප්‍රශ්න අංකය
வினா இல.
Question No. 01

ඉතිහාසය II
வரலாறு II
History II

25-C T

විභාග අංකය
சுட்டெண்
Index No. ..............................




0170

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2012 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2012 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2012

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II (I කොටස)
வரலாறு II (பகுதி I)
History II (Part I)

25-B T II

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
Three hours

சுட்டெண்: .........................

ஐரோப்பிய வரலாறு – ஆதி காலம் முதல் கி.பி 1989 வரை

**அறிவுறுத்தல்கள்:**

※ இவ்வினாத்தாளில் **40** வினாக்கள் உள்ளன. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்தில்** விடை எழுதுக.

※ ஒவ்வொரு வினா தொடர்பாகவும் **ஐவைந்து** விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** சரியானது.

※ ஒரு வினாவுக்கு உரிய சரியான விடையைத் தெரிவு செய்த பின் அதனை **இப்பத்திரத்திலே அறிவுறுத்தல்களுக்கமையக்** குறிப்பிடுக.

※ **இவ்வினாப்பத்திரத்திற்கு 40 புள்ளிகள் வழங்கப்படும்.**

※ உமது விடைத்தாள்களை ஒப்படைக்கும் பொழுது பகுதி I இற்கான விடைகளை எழுதிய பின்னர், பகுதி II இற்கான விடைத்தாளுடன் **இணைத்து ஒப்படைக்க வேண்டும்.** இரண்டு பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலமாகும்.**

## பகுதி I

● **1 - 10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

1. (1) இயூஃபிறேற்றிஸ் (2) கீறீற் (3) சைப்ரஸ் (4) சிசிலி (5) கோர்ஸிகா (......)

2. (1) அதென்ஸ் (2) மெகாரா (3) மிலெற்றஸ் (4) ஸமோஸ் (5) பாரசீகம் (......)

3. (1) முடியாட்சி (2) குழுவாட்சி (Oligarchy) (3) கொடுங்கோலாட்சி (4) இறைமுறை ஆட்சி (5) மக்களாட்சி (......)

4. (1) யூதர் (2) ஒஸ்ற்றோகொதியர் (3) விஸிகொதியர் (4) லொம்பாடர் (5) வன்டோலர் (......)

5. (1) வொலோஞ்ஞா (2) பாரிஸ் (3) அபேலார்ட் (4) ஒக்ஸ்போர்ட் (5) ஹைடல்வேர்க் (......)

6. (1) லங்காஸ்ற்றர் (2) ஃபிறாங்க் (3) யோர்க் (4) ரியூடர் (5) ஹனோவர் (......)

7. (1) ஜோன் கவொற் (2) கார்ட்டியர் (3) ஜோலியெற் (4) லா ஸால் (5) மார்க்குவெற் (......)

8. (1) வொஸ்பொறஸ் (2) டார்டநெல்ஸ் (3) ஜிவ்றோல்ற்றர் (4) மலாக்கா (5) பனாமா (......)

9. (1) றொவேர்ட் வால்போல் (2) றொவேர்ட் ஓவன் (3) ஹென்றி பாமேர்ஸ்ற்றன் (4) வென்ஜமின் டிஸ்றைலி (5) வில்லியம் கிளாட்ஸ்ற்றன் (......)

10. (1) சர்வதேச நாணய நிதியம் (IMF)
(2) சர்வதேச நீதிமன்றம் (ICJ)
(3) ஐக்கிய நாடுகள் பிள்ளைகள் நிதியம் (UNICEF)
(4) வட அத்திலாந்திக் உடன்படிக்கை நிறுவனம் (NATO)
(5) ஐக்கிய நாடுகள் அபிவிருத்தித் திட்டம் (UNDP) (......)

[பக். 2 ஐப் பார்க்க

● **11 - 15** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப்** பெயர்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒரு** சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடனொன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியைத் தெரிந்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

11. (1) ஸெயஸ் - ஜுப்பிற்றர்
(2) அதீனா - மினேர்வா
(3) அப்போலோ - சாத்தான் (Satan)
(4) அஃப்றொடைற் - வீனஸ்
(5) பொஸைடென் - நெப்ற்றியூன் (……)

12. (1) சோக்கிறற்றீஸ் - நல்லொழுக்கம் அறிவாகும்
(2) ஹிப்போகிறற்றீஸ் - ஒவ்வொரு நோய்க்கும் இயற்கையான காரணமுண்டு
(3) பிளேற்றோ - தத்துவஞானி - அரசன்
(4) அரிஸ்டோடில் - மனிதன் அரசியல் விலங்காவான்
(5) மக்கியாவெலி - மனிதன் சுதந்திரத்தோடு பிறக்கின்றான் (……)

13. (1) உரோமப் பேரரசு - உரோமாபுரி
(2) உதுமானியப் பேரரசு - கொன்ஸ்தாந்திநோபிள்
(3) ஒஸ்திரியப் பேரரசு - வியென்னா
(4) பிரித்தானியப் பேரரசு - கிளாஸ்கோ
(5) ஜேர்மனியப் பேரரசு - பேர்லின் (……)

14. (1) நூற்றாண்டுப் போர் - பிரான்ஸூம் பங்குகொண்டது
(2) முப்பதாண்டுப் போர் - பிரான்ஸூம் பங்குகொண்டது
(3) ஏழாண்டுப் போர் - பிரான்ஸூம் பங்குகொண்டது
(4) கிறிமியாப் போர் - பிரான்ஸூம் பங்குபற்றியது
(5) ஏழுவாரப் போர் - பிரான்ஸூம் பங்குபற்றியது (……)

15. (1) ஹஸ்ஸைற்றுகள் - வொஹீமியா
(2) லூதரன் பிரிவினர் - கிரேக்கம்
(3) ஹியுகநோட்ஸ் - பிரான்ஸ்
(4) பியூறிற்றன்ஸ் - இங்கிலாந்து
(5) பிறெஸ்விற்றிரியர் - ஸ்கொற்லாந்து (……)

● **16 - 25** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள்/ திகதிகள்/ கூற்றுகள் என்பவற்றின் தொகுதிகள் X, Y என்னும் நிரல்களிலே தரப்பட்டுள்ளன. Y நிரலிலே தரப்பட்டுள்ள பெயர்கள்/ திக்திகள்/ கூற்றுகள் X நிரலிலே தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையிலே தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கிலே தரப்படவில்லை. X நிரலில் உள்ளவற்றை Y நிரலிற்கேற்ப சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள **ஐந்து** சேர்மானங்களுள் ஒன்று சரியானதாகும். **சரியான** சேர்மானத்தைத் தெரிவுசெய்து அதன் **இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

16.

| X | Y |
|---|---|
| (i) கிளீஸ்தெனிஸ் | A மருத்துவத்தின் தந்தை |
| (ii) ஹெறொடோற்றஸ் | B அதீனிய ஜனநாயகத்தின் தந்தை |
| (iii) ஹிப்போகிற்றீஸ் | C முதலாவது உரோமப் பேரரசன் |
| (iv) ஒக்ற்ரேவியன் | D மனிதநேயத்தின் தந்தை |
| (v) பெற்றார்க் | E வரலாற்றின் தந்தை |

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (……)

17.

| X | Y |
|---|---|
| (i) பிளேற்றோ | A டெகமெறோன் (Decameron) |
| (ii) ரசிற்றஸ் | B யுற்றோப்பியா (Utopia) |
| (iii) வொக்காசியோ | C மடைமை மீதான புகழ்ச்சி (Praise of Folly) |
| (iv) இராஸ்மஸ் | D 'குடியரசு' (The Republic) |
| (v) தொமஸ் மோர் | E வரலாறுகள் (Histories) |

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (……)

[பக். 3 ஐப் பார்க்க

18. X / Y

(i) தொலெமி — A பரிணாமக் கோட்பாடு
(ii) கோப்பேர்நிகஸ் — B சார்பியற் கோட்பாடு (Theory of relativity)
(iii) ஐஸாக் நியூற்றன் — C பிரஞ்ச அசைவுப் பிரமாணம்
(iv) சார்ள்ஸ் டார்வின் — D பூமியை மையமாகக் கொண்ட பிரபஞ்சக் கோட்பாடு
(v) அல்வேர்ட் ஐன்ஸ்ற்ரீன் — E சூரியனை மையமாகக் கொண்ட பிரபஞ்சக் கோட்பாடு

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

19. X / Y

(i) 313 — A நான்ற் பிரகடனம்
(ii) 1215 — B கிறிஸ்தவருக்கு வழிபாட்டுச் சுதந்திரம் வழங்கிய மிலான் பிரகடனம்
(iii) 1598 — C புரட்சிகள் ஏற்பட்ட வருடம்
(iv) 1848 — D பேர்ளின் சுவர் இடிக்கப்பட்டமை
(v) 1989 — E பெரிய பட்டயம் (Magna Carta)

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

20. X / Y

(i) வலோய் — A இங்கிலாந்து
(ii) பிறகன்ஸா — B இத்தாலி
(iii) றொமானோவ் — C ரஷ்யா
(iv) ஸ்ருவர்ட் — D பிரான்ஸ்
(v) சவோய் — E போர்த்துக்கல்

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

21 X / Y

(i) ஸ்பானியா — A லூயி XIII
(ii) இங்கிலாந்து — B விக்ற்ரர் இம்மானுவேல் II
(iii) பிரான்ஸ் — C மௌன வில்லியம்
(iv) நெதர்லாந்து — D பெர்திநந்து, இஸாவெலா
(v) இத்தாலி — E ஹென்றி VII

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

22. X / Y

(i) புதிய உலகம் — A பிரித்தானியப் பேரரசு
(ii) ஒரு புவியியல் வர்ணிப்பு மட்டுமாகும் — B இந்தியா
(iii) அங்கு சூரியன் அஸ்தமிப்பதில்லை — C அமெரிக்காக் கண்டம்
(iv) பிரித்தானிய முடியின் ஒளிமணி — D துருக்கி
(v) ஐரோப்பாவின் நோயாளி — E இத்தாலி

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

23. X / Y

(i) தோமஸ் ஹொப்ஸ் — A பயனுடைவாதம்
(ii) மொன்ற்ரெஸ்கியு — B ஒரு நாட்டிற் சோசலிஸம்
(iii) ஜெரெமி பெந்தம் — C இடையறாத புரட்சி
(iv) லியோன் ற்றொற்ஸ்கி — D அதிகார வேறாக்கம்
(v) ஜேசெப் ஸ்ராலின் — E சர்வாதிகார ஆட்சி

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

24. X / Y

(i) ஒளிமிகு புரட்சி — A மனித உரிமைகள் பிரகடனம்
(ii) அமெரிக்கப் புரட்சி — B உரிமைகள் மசோதா (Bill of Rights)
(iii) பிரெஞ்சுப் புரட்சி — C தொழிலாளர் வர்க்கச் சர்வாதிகாரம்
(iv) ரஷ்யப் புரட்சி — D சர்வதேச மனித உரிமைகள் பிரகடனம்
(v) ஐக்கிய நாடுகள் — E சுதந்திரப் பிரகடனம்

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (......)

[பக். 4 ஐப் பார்க்க

2865

25. 

| X | Y |
|---|---|
| (i) வேர்சைல் உடன்படிக்கை | A பல்கேரியா |
| (ii) சென்ற் ஜெர்மேயின் உடன்படிக்கை | B துருக்கி |
| (iii) நியூலி உடன்படிக்கை | C ஹங்கேரி |
| (iv) ட்றியானோன் உடன்படிக்கை | D ஜேர்மனி |
| (v) லௌசான் உடன்படிக்கை | E ஒஸ்த்திரியா |

(1) D E C A B (2) C E A B D (3) D E A C B (4) B E A C D (5) E D A C B (……)

● **26 - 30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு மாற்று விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** அல்லது **பல** சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளைத் தெரிவு செய்து

**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் ………… **1** எனவும்

**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ………… **2** எனவும்

**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் ………… **3** எனவும்

**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் ………… **4** எனவும்

**ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரியாயின் ………… **5** எனவும் **புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| அறிவுறுத்தல்களின் சுருக்கம் | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | **ஒரு** விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு** மேற்பட்ட விடைகள் சரி |

26. **மேல்வருவோருள் இசைப்பாடல்களை இயற்றிய கிரேக்க கவிஞர்கள் யாவர் ?**
   (A) ஸஃபோ
   (B) பைதகரஸ்
   (C) பின்டார்
   (D) பெரிக்கிளீஸ்
   (……)

27. **உரோமர் பண்பாடு பற்றிய குறிப்புகளில் எது/ எவை சரியானது/ சரியானவை ?**
   (A) உரோமரின் கோயில்களிற் பார்தினோன் மிகப் பிரசித்தமானது.
   (B) ஃபீடியாஸ் பிரசித்தமான உரோமச் சிற்பியாவார்.
   (C) உரோமப் பேரரசர்களால் ஒரு பொழுதுபோக்கிடமாகக் கொலோஸியம் கட்டப்பட்டது.
   (D) உரோமரின் கட்டிடங்கள் பயன்பாடு கருதி அமைக்கப்பட்டவை.
   (……)

28. **மேல்வருவம் கூற்றுகளில் எது/ எவை மறுமலர்ச்சி தொடர்பாகச் சரியானது/ சரியானவை ?**
   (A) வட இத்தாலியிலுள்ள சுதந்திரமான இராச்சியங்களில் மறுமலர்ச்சி ஆரம்பமாகியது.
   (B) மறுமலர்ச்சிக் காலத்திலே கிரேக்க, லத்தீன் பண்பாட்டு வடிவங்கள் புத்துயிர் பெற்றன.
   (C) துருக்கியர் கொன்ஸ்தாந்தி நோபிளைக் கைப்பற்றியமை மறுமலர்ச்சி ஏற்படுவதற்கு ஏதுவான ஒரு முக்கியமான காரணமாகும்.
   (D) கப்பலோட்டி ஹென்றி (Henry the Navigator) மறுமலர்ச்சிக்கு ஆதரவு புரிந்த முதன்மையானோரில் ஒருவராவார்
   (……)

29. **மேல்வருவனவற்றுள் எவை ஒரு தேசிய அரசின் பிரதானமான அம்சங்களாகும் ?**
   (A) ஒரு பலமான நிலைப்படை
   (B) ஒரு பலமான மத்திய அரசாங்கம்
   (C) ஒரு தகராறு புரியும் மானியப் பிரபுக்கள் வர்க்கம்
   (D) அரசியல் அதிகாரப் பரவலாக்கம்
   (……)

30. **மேல்வருவோரிற் பிரான்ஸின் முதலமைச்சர்களாக விளங்கியோர் யாவர் ?**
   (A) ஹென்றி ஹட்ஸன்
   (B) றிச்செலியூ
   (C) மஸாறின்
   (D) வோல்ற்ரேயர்
   (……)

[பக். 5 ஐப் பார்க்க

- **31 - 35** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றில் **ஒன்று** உரிய தலைப்புடன் **பொருந்தாது**. **அதனைத்** தெரிவு செய்து அதன் **இலக்கத்தை புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

31. **ஆதிகால கிறிஸ்தவம்**
    (1) கிறிஸ்தவம் யேசுநாதரின் வாழ்க்கை, போதனைகள், மரணம் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டது.
    (2) உரோம அதிகாரிகளால் யேசுநாதர் சிலுவையில் அறையப்பட்டார்.
    (3) கடவுள் ஒருவர் என்பது கிறிஸ்தவக் கோட்பாடு.
    (4) நீரோ சக்கரவர்த்தி கிறிஸ்தவர்களுக்கு வழிபாட்டுரிமைகளை வழங்கினார்.
    (5) தியோடோசியஸ் என்னும் பேரரசர் கிறிஸ்தவத்தை உரோம பேரரசரின் அரச சமயமாக்கினார். (……)

32. **புவியியற் கண்டுபிடிப்புகள்**
    (1) ஸ்பானியர், போர்த்துக்கேயர் ஆகியோரே புவியியற் கண்டுபிடிப்புகளின் முன்னோடிகளாவர்.
    (2) கீழைத்தேயங்களுக்குச் செல்வதற்கு ஒரு புதிய வழியைக் கண்டுகொள்வதே புவியியற் கண்டுபிடிப்புகளின் பிரதானமான நோக்கமாகும்.
    (3) வஸ்கோடாகாமாவின் பிரயாணங்களுக்கு பேர்ந்திருந்து, இஸாவெலா ஆகியோர் ஆதரவு புரிந்தனர்.
    (4) வஸ்கோடாகாமா 1498 இல் கள்ளிக்கோட்டையை (Calicut) அடைந்தார்.
    (5) அல்பர்க்கேர்க் போர்த்துக்கேயரின் கீழைத்தேய சாம்ராச்சியத்துக்கு அடித்தளமிட்டவரென்று கருதப்படுகிறார். (……)

33. **இத்தாலியை ஒன்றாக இணைத்தமை**
    (1) இத்தாலியிலுள்ள பிரித்தானியரின் அதிகாரம் இத்தாலிய இணைப்புக்கு ஒரு பெருந்தடையாக இருந்தது.
    (2) பீட்மன்ற் - சார்டீனியாவின் தலைமையில் இத்தாலி இணைக்கப்பட்டது.
    (3) கவூர் இத்தாலிய இணைப்பை ஏற்படுத்தியவர்.
    (4) கரிவோல்டியின் ஆதரவோடு நேபிள்ஸ், சிசிலி ஆகியவை பீட்மன்ற் - சார்டீனியாவுடன் இணைக்கப்பட்டன.
    (5) உரோமாபுரி இத்தாலியின் தலைநகராக 1870 இலே பிரகடனப்படுத்தப்பட்டது. (……)

34. **இரண்டாம் உலகப் போர்**
    (1) உலக வரலாற்றில் இரண்டாம் உலகப் போர் மிகப் பேரழிவை ஏற்படுத்திய போராகக் கருதப்படுகின்றது.
    (2) ஜப்பான் தோல்வியுற்றதோடு இரண்டாம் உலகப் போர் முடிவுற்றது.
    (3) உலக சமாதானத்தைப் பேணுவதற்காக இரண்டாம் உலகப் போரின் முடிவிலே சர்வதேச சங்கம் (League of Nations) உருவாக்கப்பட்டது.
    (4) ஐரோப்பிய தேசங்களின் கடல்கடந்த சாம்ராச்சியங்களின் சீர்குலைவினை இரண்டாம் உலகப் போர் துரிதப்படுத்தியது.
    (5) இரண்டாம் உலகப் போரின் பின்னர் ஐக்கிய அமெரிக்கா, சோவியத் யூனியன் ஆகியவற்றின் தலைமையில் இரண்டு வல்லரசு அணிகள் உருவாகின. (……)

35. **இரண்டாம் உலகப் போருக்குப் பிற்பட்ட சோவியற் யூனியன்**
    (1) புதிய பொருளாதாரக் கொள்கையினை ஜோஸெஃப் ஸ்ராலின் நடைமுறைப்படுத்தினார்.
    (2) நிக்கிதா க்றுஷேவ் ஸ்ராலினையும் அவரது நடவடிக்கைகளையும் கண்டித்தார்.
    (3) **கிளஸநோஸ்ற்** என்னும் கட்டுப்பாடின்மைக் கொள்கையை மிகாயில் கோர்பஷேவ் ஆரம்பித்தார்.
    (4) பெரெஸ்ற்றொயிகா என்னும் பொருளாதார சீரமைப்புக் கொள்கையினை கோர்பஷேவ் பிரகடனப்படுத்தினார்.
    (5) கோர்பஷேவின் கொள்கைகளினாற் பனிப்போர் தணிந்தது. (……)

[பக். 6 ஐப் பார்க்க

- **36 - 40** வரையுள்ள வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து **அதன் இலக்கத்தைப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

அட்டவணை

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| **1.** | சரியானது | பிழையானது |
| **2.** | சரியானது | சரியானது |
| **3.** | பிழையானது | பிழையானது |
| **4.** | பிழையானது | சரியானது |
| **5.** | சரியானது | சரியானதும், முதலாம் கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|
| 36. நகரக் குடியரசுகளின் ஜனநாயச் சார்பான பண்புகள் அதென்ஸிலே சிறப்புற்றிருந்தன. | பருவமடைந்த ஆண்கள் எல்லோரும் பங்குபற்ற முடிந்த சபையிலே அரசு தொடர்பான பிரதானமான விடயங்களை ஆதீனியர் விவாதித்து அவை தொடர்பாக வாக்களித்தனர். | (……) |
| 37. கிரேக்கச் சட்டமே புராதன கிரேக்கரின் உன்னதமான சாதனையாகும். | வேர்ஜில், ஹெறேஸ் ஆகிய இருவரும் புராதன உரோமாபுரியின் புகழ்மிக்க கவிஞராவர். | (……) |
| 38. 1774 ஆம் ஆண்டு கண்ட (Continentol) காங்கிரஸ் மாநாட்டில் நடைபெற்ற தேநீர் விருந்து வொஸ்ற்ரன் தேநீர் விருந்து என்று சொல்லப்படும். | அமெரிக்கப் புரட்சியிலே “சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம்” என்ற சுலோகத்தோடு இங்கிலாந்திற்கு எதிராக அமெரிக்கர் போராடினர். | (……) |
| 39. ஜேர்மனி எதுவித நிபந்தனைகளுமின்றி 1945 மே மாதத்தில் நேச நாடுகளின் படைகளிடம் சரணடைந்தது. | ஜேர்மன் சமஷ்டிக் குடியரசு சோவியத் கட்டுப்பாட்டிலுள்ள ஜேர்மனியின் பகுதியில் அமைக்கப்பட்டது. | (……) |
| 40. சோவியத் யூனியனும் அதன் கட்டுப்பாட்டிலிருந்த அரசுகளும் 1955 இல் ஏற்படுத்திய பரஸ்பரப் பாதகாப்பு உடன்படிக்கை வார்ஸோ உடன்படிக்கை என்று சொல்லப்படும். | சோவியத் ஒன்றியம் சீர்குலைந்ததும் பனிப்போர் முடிவுற்றது. | (……) |

* *

[பக். 7 ஐப் பார்க்க

ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2012 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர(உயர் தர)ப் பரீட்சை, 2012 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2012

නව නිර්දේශය
புதிய பாடத்திட்டம்
New Syllabus

ඉතිහාසය II (II කොටස)
வரலாறு II (பகுதி II)
History II (Part II)

25-B T II

ஐரோப்பிய வரலாறு – ஆதிகாலம் முதல் கி.பி 1989 வரை

அறிவுறுத்தல்கள்:
※ **முதலாம்** வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(முதலாம் வினாவுக்கு விடையளிப்பதற்கு **ஐரோப்பாவின் புறவுருவப்** படம் வழங்கப்படும்).

## பகுதி II

1. கீழே தரப்பட்ட **எல்லா** இடங்களையும் உமக்கு வழங்கப்பட்ட வரைபடத்திற் குறித்துப் பெயரிட்டு, அவற்றுள் எவையேனும் **இரண்டிற்கு** வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.
   (i) கிறீற் தீவு (ii) ரைபர் நதி (iii) கொன்ஸ்தாந்தி நோபிள்
   (iv) லண்டன் (v) சுவிற்சர்லாந்து (vi) ஆங்கிலக் கால்வாய்
   (vii) வோல்ற்றிக் கடல் (viii) டான்ஸிக்
   *(சரியாகக் குறித்துப் பெயரிடுவதற்கு 01 புள்ளி ; சிறுகுறிப்பு ஒவ்வொன்றுக்கும் 05 புள்ளிகள்)*

2. உரோமாபுரி ஒரு சிறிய லத்தீன் இராச்சியமாகவிருந்து பரந்தவொரு பேரரசாக வளர்ந்தமையிலுள்ள பிரதான கட்டங்களைப் பரிசீலனை செய்கக. *(14 புள்ளிகள்)*

3. (i) மத்திய ஐரோப்பாவில் மானியமுறை உருவாகியதற்கான பிரதானமான காரணங்களைச் சுருக்கமாக ஆராய்க. *(05 புள்ளிகள்)*
   (ii) ஓர் அரசியல், சமூக, பொருளாதார முறை என்ற வகையில் மானியமுறையின் பிரதான அம்சங்களை விளக்குக. *(09 புள்ளிகள்)*

4. "கைத்தொழிற் புரட்சி ஐரோப்பிய சமுதாயத்தில் நிச்சயமாக ஒரு பெரும் மாற்றத்தை ஏற்படுத்தியது".
   (i) கைத்தொழிற் புரட்சி ஆரம்பித்த நாட்டின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*
   (ii) கைத்தொழில் துறையில் ஏற்பட்ட ஆரம்பக் கண்டுபிடிப்புகளில் **இரண்டினைக்** குறிப்பிடுக. *(02புள்ளிகள்)*
   (iii) கைத்தொழிற் புரட்சி ஏற்பட்டமைக்கு ஏதுவான காரணங்கள் **இரண்டினைச்** சுருக்கமாகக் குறிப்பிடுக. *(04 புள்ளிகள்)*
   (iv) கைத்தொழிற் புரட்சியின் சமூக, பொருளாதார விளைவுகள் தொடர்பாக மேலே குறிப்பிட்ட கூற்றை ஆராய்க. *(07 புள்ளிகள்)*

5. பிரெஞ்சுப் புரட்சி ஏற்படுவதற்கு அடிப்படையாகவிருந்த அரசியல், பொருளாதார, சமூக நிலைகளை ஆராய்க. *(14 புள்ளிகள்)*

6. "பிஸ்மார்க்கின் தலைமையில் ஜேர்மனியை ஒன்றிணைக்க மேற்கொள்ளப்பட்ட கட்டம் ஒவ்வொன்றும் போரில் முடிந்தது".
   (i) ஜேர்மனியை ஒன்றாக இணைப்பதற்கு முயற்சிகளை மேற்கொண்ட அரசின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*
   (ii) அந்த இராச்சியத்தின் தலைமையில் ஏற்பட்ட சுங்கவரி விலக்கு ஒன்றியத்தின் பெயரைக் குறிப்பிடுக *(01 புள்ளி)*
   (iii) 1815 – 1848 ஆகிய காலத்தில் ஜேர்மனியை இணைப்பதற்கு எதிராகவிருந்த தடைகளைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. *(04 புள்ளிகள்)*
   (iv) விஸ்மார்க்கின் தலைமையில் ஜேர்மனியை ஒன்றிணைத்தமையின் பிரதான கட்டங்களை விளக்குக. *(08 புள்ளிகள்)*

7. "ஐரோப்பாவில் முதலாம் உலகப் போரின் பின்னர், சர்வாதிகார ஆட்சிகள் எழுச்சி பெற்றதால் இரண்டாம் உலகப் போர் ஏற்பட்டமை தவிர்க்கமுடியாத ஒன்றாகிவிட்டது".
   (i) முதலாம் உலகப் போரின் முடிவில் ஜேர்மனி ஒப்புக்கொண்ட உடன்படிக்கை யாது ? *(01 புள்ளி)*
   (ii) முதலாம் உலகப் போரின் பின், சமாதானத்தைக் குறிக்கோளாகக் கொண்டு உருவாக்கப்பட்ட சர்வதேச நிறுவனத்தின் பெயரைக் குறிப்பிடுக. *(01 புள்ளி)*
   (iii) முதலாம் உலகப் போரின் பின் இத்தாலியிலும் ஜேர்மனியிலும் ஏற்பட்ட சர்வாதிகார ஆட்சிகள் யாவை ? *(02 புள்ளி)*
   (iv) அந்த ஆட்சிகளின் அதிபர்கள் யார் ? *(02 புள்ளி)*
   (v) இரண்டாம் உலகப் போருக்கு ஏதுவான காரணங்கள் தொடர்பாக மேலே குறித்த கூற்றினை ஆராய்க. *(08 புள்ளிகள்)*

8. மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டின்** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சுருக்கமான குறிப்புகள் எழுதுக:
   (i) லியொனாடோ டா வின்சி (ii) மார்டின் லூதர்
   (iii) நெப்போலியன் வொனப்பார்ட (iv) கமிலோ கவூர்
   (v) V. I. லெனின்
   *(ஒன்றுக்கு 07 புள்ளிகள்)*

9. இரண்டாம் உலகப் போர் முடிந்த பின்னுள்ள முதலாவது தசாப்தத்திலே உலக வல்லரசுகள் எவ்வாறு இரு அணிகளாகப் பிரிந்தன என்பதைப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

* * *

